SRI M. C. MUTHUKUMARASWAMY : ஷெட்யூல் என்பதற்கு அனுபந்தசாதி என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது ஆங்கில வார்த்தை. இது இல்லையென்ற காரணத்தினால் பலவிதமான தகராறுகள் ஏற்படுகின்றன. ஆகையால் ஹரிஜனன் என்ற பெயரை ஒப்புக்கொள்ள சென்னை சர்க்கார் மத்திய சர்க்காருக்குச் சிபாரிசு செய்வார்களா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் சொல்கிற யோசனை சரி. நானே அரசியல் நிர்ணய சபையின் பிரதிநிதியாக இருந்தேன். அப்போது ஹரிஜனன் என்ற பெயரைப் போடவேண்டும் என்று சொல்லிப் பார்த்தேன். எல்லோரும் பொதுவாகப் போட்டுவிட்டார்கள். அது அப்படியே இருக்கிறது. நாம் ஒன்றும் செய்வதிற்கில்லை.

SRI K. VINAYAKAM : எந்த எந்த சாதிகள் எந்த எந்தப் பிரிவுகளில் போடவேண்டும் என்கிற உரிமை மாகாண சர்க்கார்களுக்குத்தான் இருக்கிறது. மத்திய அரசாங்கத்திற்கு இல்லை. ஹரிஜனன் என்ற சாதி ஆதித்திராவிடர்கள் அத்தனை பேருக்கும் பொதுவாக நம் ராஜ்யத்தில் இருக்கிறது. ஆகவே இதை ஹரிஜனன் என்று போட்டால் போதும் என்று செய்வதற்கு என்ன கஷ்டம் இருக்கிறது என்று கேட்கிறேன்.

THE HON. SRI P. KAKKAN : நான் முன்பே சொன்னேன். அரசியல் அமைப்பில் இருப்பதை மாற்றுவதற்கில்லை. இதற்கு மாகாண சர்க்கார் ஒன்றும் செய்ய முடியாமல் இருக்கிறது.

THE HON. SRI C. SUBRAMANIAM : I would like to explain the position Sir. தீண்டப்படாதவர்கள் எல்லோருக்கும் ஹரிஜனங்கள்—கடவுளின் மக்கள்—என்ற பெயர் காந்திஜீ வைத்தார்கள். ஹரிஜனங்கள் என்று தனிப்பட்ட சலுகைக் கொடுக்கப்படுகிறது. ஆகையால் அவர்கள் தீண்டப்படாதவர்களில் எந்தப் பகுதியைச் சார்ந்தவர்கள் என்று தெளிவாகத் தெரிந்த பிறகே சலுகை கொடுக்கும்படி இருக்கிறது. அது தெரிந்த பிறகுதான் நிர்ணயிக்க முடியும். அதன் காரணமாக இந்தச் சங்கடம் ஏற்படுகின்றது. ஆகவே ஹரிஜனங்கள் என்றாலும் தீண்டப்படாதவர்களில் எந்தப் பகுதியைச் சார்ந்தவர்கள் என்று குறிப்பிடுவதில் அனுகூலம் இருக்கிறது என்பதனால் அப்படி வைக்கப்பட்டிருக்கிறது என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

*Educational concessions to Viswakarama students*

* 719 *Q.*—SRI A. R. SUBBIAH MUDALIYAR : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

கன்னியாகுமரி ஜில்லாவில் கம்மாள (விஸ்வகர்மா வகுப்பு) மாணவர்களுக்கு 1957–58-ம் வருஷத்தில் அளித்த கல்வி சலுகையை 1958–59 வருஷத்தில் நிறுத்தப்பட்டதற்கு காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : The fee concessions granted to students belonging to Kammala (Viswakarma) Community in Kanyakumari district during 1957–58 have not been discontinued.

SRI A. R. SUBBIAH MUDALIYAR : விஸ்வகர்மா வகுப்பு குழந்தைகளுக்குக் கொடுக்கப்பட்டு வந்த சலுகை 1958-ம் ஆண்டு ஜூலை மாதம் முதல் நிறுத்தப்பட்டிருக்கிறது என்று முதல் மந்திரி அவர்களிடம் மகஜர் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதில் சலுகை மேற்கொண்டும் கொடுக்கப்படவேண்டுமென்று கோரப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, the report I have received from the Director of Public Instruction is that the students belonging to the Kammala community (Viswakarma community)

30th October 1958]

in the Kanyakumari district have been included in the list of Backward Classes of that district and that the fee concessions in force in the transferred areas on 1st November 1956 are being continued.

MR. SPEAKER : We will now take up question 708. The Hon. Minister is now ready with the answer.

### *Nylon nets*

* 708 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) இந்த மாகாணத்தில் மீனவர்களுக்கு இதுவரை எத்தனை "நைலான்" வலைகள் வினியோகப்பட்டிருக்கின்றன—ஜில்லாவாரியாக ?

(ஆ) இந்த நைலான் வலைகள் எந்த முறையில் மீனவர்களுக்கு வினியோகிக்கப்படுகிறது ?

(இ) இந்த வலைகள் எங்கிருந்து தருவிக்கப்பட்டிருக்கின்றன ? இதன் விலை என்ன ?

(ஈ) இந்த வலைகளை நம் நாட்டிலேயே தயாரிக்க ஏதேனும் முயற்சி எடுக்கப்படுகிறதா ?

(உ) அப்படியானால் அதன் விவரமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : A reply[a] is placed on the table.

(The hon. Member Sri Vedarathnam was looking up his papers.)

MR. SPEAKER : I am sorry I am taking the hon. Member by surprise. He should have a copy of the questions put down for to-day on the table. If he is not putting any supplementary, I will go to the next question.

SRI A. VEDARATHNAM : கடற்கரை ஓரங்களில் இருக்கிற மீனவர்களுக்கு எல்லாம் இந்த நைலான் வலை கொடுக்கும்படியாகச் செய்ய அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : If the hon. Member looks up the answer placed on the table, he will find that these nets are supplied by the department to fishermen for their bona fide use in the following order of preference, namely, (1) Marine Fishermen Co-operative Societies and individuals or groups of fishermen to whom mechanized boats are supplied, (2) Fishermen Co-operative Societies to whom mechanized boats are not supplied, but who require the nets, (3) Individual marine fishermen or group of fishermen to whom mechanized boats could not be supplied and (4) Inland fishermen. Therefore the scheme provides for the supply of nets to all of them but a priority is fixed and supply is made according to the availabilty of these nets.

SRI A. GOVINDASAMY : இந்த நைலான் வலை கொடுப்பதில் கன்னியாக்குமரி மாவட்டத்திற்கு மட்டும் 89 கொடுக்கப்பட்டிருக்கிறது. இதர ராமநாதபுரம், தென்னாற்காடு, செங்கல்பட்டு முதலிய மாவட்டங்களுக்குக் குறைவாகக் கொடுக்கப்பட்டிருக்கிறதே. (பின்னால் இருந்து ஒரு குரல்) ஸ்ரீ விநாயகம் வேண்டுமானால் கடற்கரை இல்லாத ஜில்லாக்களுக்கு ஏன் கொடுக்கப்படவில்லை என்று கேட்கலாம். நான் கடற்கரை ஜில்லாக்களில் உள்ள மீனவர்களுக்கு ஏன் சமமாக விநியோகிக்கப்படவில்லை என்று கேட்கிறேன்.

---

a Printed as Appendix VII on page 190 infra.